உ

சிவமயம்.

# "துறவி"

·1956.


| | | |
|---|---|---|
| மனமத<br>மலர் 2 | திங்கள் வெளியீடு. | தை<br>இதழ் 1 |





## தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம்,
திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"


பதிப்பாளர்:

**சுவாமி சொரூபானந்தா**

ஆண்டுக் கட்டணம் ரூ 2/- தனி இதழ் அணா 3/-

ஓம்.

# "துறவி"

## பொருளடக்கம்.

ஓம்

# "துறவி"

| மன்மத<br>மலர் 2 | தமிழ்<br>திங்கள் வெளியீடு. | தை<br>இதழ் 1 |
|---|---|---|

## கடவுள் வாழ்த்து.

தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய்க் கோத்தும்பீ.

*—மாணிக்கவாசகர்.*

தோன்றி நின்று அழியுந் தன்மையுடைய சிறியதோர் இன்பத்தை விழையாது என்றும் நிலைபேருயுள்ளதும் எண்ணுந்தோறும், காணுந்தோறும், பேசுந்தோறும், எப்போதும் என்பனைத்தும் உள்ளுருகும்படி பேரின்பமாகிய ஆனந்தத்தேனைப்பொழியும் திருச்சிற்றம்பலத்தே திருக்கூத்தியற்றும் இறைவனுடைய திருவைந் தெழுத்தையும், திருமேனியையும் திருப்புகழையும் மனத்தால் வாக்கால், காயத்தால் எண்ணி கண்டு பாடி வழிபடுவோமாக.

வாழ்க ✻அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

அந்தண ரென்னும் அறவோர் அனுபவத்தை
இந்த உலகோர்க் கெடுத்துரைக்க—வந்த
துறவி வெளியீடுந் தூய தமிழ்நாடும்
துறவறமும் வாழிய மாதோ.

✻ செந்தண்மை பூண்டொழுகுபவர்.

[ சென்னை வியாசர்பாடி ஆனந்தாஸ்ரமம் அருட்டிரு சுவாமி முக்தானந்தா அவர்கள் நந் தண்டமிழ் நாட்டில் அறிவு சான்றோர்களால் போற்றப்படுபவர். நிறை மொழி மாந்தர்களின் வரிசையில் வைத்து எண்ணப்படும் பண்பாடமையப் பெற்றவர்கள். சொல்லும் செயலும் ஒன்றுயமையப் பெற்றவர்கள். துறவு என்ற சொல்லின் கருத்தை உள்ளவாறுணர்ந்து அதன் வழி நிற்கும் தவத்தவர்கள். இரு மொழிப் புலவர் (தமிழ் ஆரியம்) அவர்களின் உள்ளடக்கிடக்கை நெருங்கிப் பழகியவர்கட்குத்தான் புலப்படும். இத்தகைய பெரியார் முதிர்ந்தவயதுடைய வராயிருந்தும் மக்கள் மக்களாகவே வாழ வேண்டும் என்ற பெருங்கருணையோடு நம் துறவி இதழில் அவிரோத வுந்தியார் என்ற தலைப்பில் அரிய கட்டுரையைத் தொடர்ந்து வரைந்தனுப்புகின்றார்கள். இக்கட்டுரையில் அரிய வேண்டிய பல உண்மைகள் மிளிர்கின்றன. அனைவரும் படித்து அதன் பயன் பெற வேண்டு கின்றோம். ]

# அவிரோத வுந்தியார்.

முன் (ம 1 இ 12 ப 166) தொடர்ச்சி.

### வெளிப் பற்றை முனம் விடில்
### விட்டோடும் உட்பற்றெனல்.

தாயின் வயிற்றில் அடங்கிக் கிடப்பது கருவளரும் பை. உடலுள் அமைந்த உறுப்புக்களில் கருப் பையும் ஒரு உறுப்பாகவே அமைந்துள்ளது. ஆண்களின் உடம்புகளிலும் கரு வடங்கும் பை இல்லாமலில்லை. ஆணின் உடம்பிலுள்ள பையிலேதான், கரு ஊழ் வலியால் உண்டாகிப் பெருகு கின்றது. அப்போழுது, அது நண்ணுடம்பு மட்டுமா யுள்ளது. பரு வுடம்பை அடைதற்கு, அந்தப் பை இடந்தராது. ஆதலால், பரு வுடம்பு பெறுதற் குரிய இடத்திற்கு அக் கரு மாற்றப்படுகிறது, பெருகுதற்கும் அவ்விடந்தான் ஏற்றது. அதற்கென அமைக்கப் பட்டது அந்த இடமே. அதுவே தாய் வயிற்றில் அமைந்துள்ள கருப்பை. ஊழ் உந்துதலினால் ஆண் பெண் இருவரின் நேர்ச்சி யுண்டாகின்றது. கரு வூலத்தில் கரு சேர்க்கப் படுகின்றது. பின்னர்ப் பெருகத் தோடங்கு கின்றது முன்னர் இருந்த படியே, நண்ணுடம்பு உள்ளடங்கி இருக்க, அதன் உரைபோன்று, பஞ்சுத்துய் படிந்த வண்ணம், பரு வுடம்பு மேலே உறைகின்றது. சிறுகச் சிறுகத் தடிக்கின்றது. திங்கள் ஏற ஏற கை கால் முதலிய உறுப்புகள் தோன்றுகின்றன. பின்னர் வினைக் கேற்றவாறு, வேண்டிய உறுப்புகளால் மட்டும் நிறையப் பெற்று, பரு வுடம்பு முற்றுப் பெறுகின்றது. இது மிக மிக அருமை வாய்ந்த நண்ணியவேலை. இதனைத் தலைமை யேற்றுச் செய்து முடிப்பது ஊழ்.

ஊழென்பது, முன் பிறவிகளில் செய்யப்பட்ட நல்வினை தீவினைப் பயன்கள். இவை மேற்கூறிய இரு வகையாய்ப் பல படித்தாய் உள்ளன. அறிவுடையோர் இவற்றை ஒரே பெயரால்,

ஊழ் என்றே வழங்குகின்றனர் இதனை ஏவிய தலைமைப் பொறுப்பு எல்லை யற விரிந்த, எல்லாம் வல்ல பரம் பொருளிடத்தது. உண்ணப் பட்டு முடிவடைவதாகிய இடம் நோக்கி இது சேர்க்கப்பட்டது, இதனை உண்டு தொலைக்கும் முறைப்படி கோக்கப் பட்டதே வியப் பினும் வியப்பு.

இதிற் பங்கு பெறுவோரே உற்றார் ஆவார். அவரே மனைவி மக்கள் என்ற பெயரால், முன் பின்னாக வந்து கூடுபவர். தேடுபவ ரல்லர். ஊடுபவர். இவனை ஒட்டி உடனுறைந்து உரிபவர். வேறுத்து வேறுபட்டு நின்று அச்சுறுத்துபவர். அடித்துக்கொண்டு, போகின்றவர் உரியவர் என்று பாராட்டி, உதை கொடுப்பவர் வழக்கிட்டு வாங்கு-பவர் உறவினர் என்ற பெயரால், இவனை உடன் படுத்திப் பிடுங்குபவர். இன்னும் பலர், நண்பர் என்று காட்டி, நலங் கெடுத்து நலிவு செய்பவ ரெண்ணிறந்தோர். அடிமை யென அடி வணங்கி, அள்ளிக்கொள்வோர் அளவிலர். உதவியாளர் போன்று, உரிபவர் பலர். இன்னும் பலப் பல வழிகள் காட்டி, இயன்றவெலாம் எடுத் தேகுபவரே, உற்றார் எனப்படுவோர். எண்ணியபடி ஈயாவிடில், இணங்காமல் பிணங்கிக் கொள்பவர் இவரே, பிடுங்கப் பின்னிடாமல் கொடுத்துவரின், கள்ளமகிழ்வு காட்டிக் களியாடுபவர். மற்றும் தீராநோய், பெருநோய், தொடர்நோய்களும், இத்தகைய கூட்டத்தைச் சேர்ந்தவையே. இவையும் துன்பந்தருவன வல்லாமலும், பொருள் களையும் பறித்து, மருத்துவர் முதலியோருக்கு ஈவன. இத்தகைய கூட்டங்களின் பழைய கடன்களைக் கழிக்கவே, மண்ணும் பொன்-னும் மற்றவையுந் தேடவேண்டி யிருக்கின்றது.

இவற்றை யீட்டுந் துன்பமோ, எண்ணத் தொலையாது. காப்பாற்றி வைக்கும்போது கடுந்துன்பம். பிறர்க்கு அளிக்கும் போதோ, இணையிலாத்துன்பம். அதனை இழக்கும் போதோ, இணையிலாத் துன்பம். ஊன்றி நெஞ்சகத்து ஓர்ந்திடில் முழுவதும் துன்பமேயன்றி, எள்த்துணையேனும் இன்பமில்லை.

துன்பக் களஞ்சியமான இதனைத்தான், "புறப்பற்றென்பர்." இதனையே முன்னர்ப் போக்குதல் வேண்டும், வாழைமரத்திலிருந்து தண்டுபெற வேண்டியவன் அதனை மூடிக் கொண்டு, புறம்பே இருகப் பிடித்துள்ள, பட்டைகளை முன்னர்ப் போக்குதல் வேண்டும். பின்னரே தண்டை யொட்டியுள்ள, அகப்பற்றுப் போன்ற இளம் பட்டையைப் போக்குதல் முடிவதாகும். முறையும் இதுவே, இதனால், புறப்பற்றை முன்னர்ப் போக்கின், அகப்பற்றைப் போக்குதல் எளிதென்பதை, அவிரோத உந்தியார் கூறுதல்காண்பாம்,

கச—அ உந்தியார்.

நீக்காமுற் சூழ்காடு நீடெயிற் கொள்ளொணு
போக்கார் புறப்பற்றேல் உந்தீ பற
போமே அகப்பற்றென் றுந்தீ பற.

பொழிப்பு :—

நீடு எயில், சூழ்காடு நீக்காமுன், கொள்ள ஒணுது. (அது போன்று) புறப்பற்று, போக்கார் ஏல் ; அகப்பற்று போமே? (போகுமா) என்று உந்தீபற, உந்தீபற.

பொருள் :— 'நீடு எயில்'—(அரசனது அரண்மனைக்குக் காவலாய், அதனைச் சுற்றி அமைத்துள்ளதும், அகன்றும் உயர்ந்து அமைக்கப்பட்டு நிலை பெறுவதுமான) நீண்ட மதில் ; 'சூழ்காடு'—(மதிலுக்குக் காவலாக அமைக்கப்பட்டு வானுற ஓங்கி,) சூழ்ந்துள்ள காட்டை; 'நீக்காமுன்'—அழித்து ஒழிக்காததற்கு முன்னம்; 'கொள்ள ஒணுது' —அடைய முடியாதது ஆகும். (அதுபோல்) 'புறப்பற்று'—(எனதென்பதன் பொருளாக அறியாமையாற் கருதப்படும் பொன், நிலம்' மனை மக்கள் முதலிய) வெளிப்பற்றுகளை; 'போக்காரேல்'—விட்டொழிக்க முடியாதவரே ஆனுல்; 'அகப்பற்று'—(உடம்பை யான் எனக் கொள்ளும்) உட்பற்றுனது; 'போமே'—போகுமா என்ன? (போகாது) 'என்று'—என்ற உண்மையைப் பாடிக்கொண்டு, 'உந்தீபற'—உந்திப் பறவுங்கள்—சிறுமிகளே! உந்திப்பறவுங்கள்,

காடுவெட்டி வழிசெய்த பின்னரே, மதிலைக் கைக்கொள்ளல் எளிதாவது போல் புறப்பற்றைப் போக்கிய பின்னரே, அகப்பற்றுப் போதல் எளிதென்கின்றது.

எடுத்துக் காட்டு :—

"சுற்றமொ டுற்ற துவந்துவ மெல்லாம்
அற்ற வர்; தம்மொடும்' அற்றவர் தாமே"

"கதறிய ஆழியாறி ஆடுதல் கருதினர் யாவர் தாம் யாவையும்
உதறி அருத போது நாடொறும் ஒழுக விடாது அவ் ஆரவாரமே"

"கழிய நிலாதபோது சேரது கழுவி யிலாப மேது யாவையும்
ஒழிய நிலாதபோது மாசற உதற வொணுது பாசம் மூடுமே"

(தொடரும்.)

[ சென்னை நாராயணதேசிகர் நிலையம் தமிழ்ப் புலவர் தவத்திரு சுவாமி அருணகிரிநாதரவர்களை உலகம் நன்கறியும். அவர்கள் நாட்டுக்கும் மொழிக்கும் சமயத்துக்கும் பல்லாண்டுகளாக உழைத்து இதுபோது சிறிது ஓய்வு பெற்றுள்ளார்கள். இந்நிலையிலும் துறவிகள் தொண்டு நாட்டிற் கின்றியமையாதனவென எண்ணி சங்கம் அமைத்து பத்தாண்டுகளாக அரிய பணிபுரிந்து வருகின்றார்கள். அடிகளின் மனோவேகத்துக்கு இயைய பெரிதும் இடம் கொடுக்கவில்லை உடல் நிலை. இருந்தும் பொதுநலப் பணிகளை விடாது புரிந்து வருவதோடு இத்துறவி இதழுக்கும் பிறவியைப் பழித்தல் என்ற தலைப்பில் அரிய கட்டுரையை வரைந் தனுப்பியுள்ளார்கள். அவை இன்னுவொழத்து இனியவை செயாது வாணாளை வீணாளாகக் கழிக்கும் மக்களைப் பார்த்துக் கூறுவதாக அமைந்துள்ளது. நாம் ஒவ்வொருவரும் தவறாது படித்துப் பயன்பெறுவோமாக. ]

# பிறவியைப் பழித்தல்.

உலகின் கண் தோன்றும் புழுமுதல் மக்கள் ஈராகவுள்ள எல்லாவுயிர்களும் எவ்வளவு துன்பத்தை அனுபவித்த போதிலும் தம் உடலை விட்டு உயிர் நீங்க விரும்புவதேயில்லை. அங்கமெல்லாங் குறைந்து அழுகிவிடும் தொழுநோயராய் அல்லலுற்று பலரும் அருவறுத்திகழும் நிலைமையில் துன்புறினும், அத்தகைய தனதுடலில் வெறுப்புத் தோன்றுவதே இல்லை

சோற்றுவிபற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்று ஏற்றாலும் பிட்சைக் கிடையாமல் ஏக்கற்றுத் திரிந்துழன்று இருக்க இடமின்றி, படுக்கப் பாயின்றி, குடிக்கக் கூழின்றி கட்டக் கந்தையின்றி பலநாள் பரிதவித்தாலும், இம்மனிதப் பிறவியில் சலிப்போ? வெறுப்போ? மக்களுக்கு உண்டாவதில்லை

ஆகவே மக்களுக்கு எதுகாறும் உடம்பிலும் உடம்பால் நுகரப்படும் உலகப் பொருள்களிலும் வெறுப்புண்டாகவில்லையோ? அதுகாறும் மெய்யுணர்வுண்டாகப் போவதில்லை மெய்யுணர்வு உண்டாகாதவரையில், பொய்யுணர்வு (அஞ்ஞானம்) ஒழியப் போவதில்லை. அஞ்ஞானம் ஒழிந்து ஆன்மஞானம் உதிக்காத வரையில், பிறப்பும், இறப்பும் ஒழியப்போவதில்லை. பேரானந்த நிலையைப்பெறப் போவதுமில்லை. எனவே பிறவிப்பயனை அடையா. விடின் பிறவி எடுத்ததால் யாது பயன்? பிறக்காவது பயனுண்டா-தனக்காவது பயனுண்டா என்பதைப்பற்றி சிறிது ஆராய்ச்சிசெய்வாம்

ஓ! மனிதனே! நீ உலகந்தோன்றிய நாள்முதல் இதுவரையில் எண்ணத்தொலையாத எத்தனையோ பிறவிகளை (உடல்களை) எடுத்தெடுத்-துழன்று இறந்திறந்தொழிந்து மீண்டுமீண்டும் பிறப்பதினால் உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பைப் பிரித்து நீக்குகின்ற காலதூதர்கள், நீ எடுக்கும் ஒவ்வொரு பிறவியிலும் நினதுயிரைப்-பிடித்து எமலோகத்திற்குக் கொண்டுபோய் கைகளும் ஓய்ந்து சலிப்படைந்து விட்டார்கள் இஃதன்றி,

பிறவிகள் தோறும் தாய்மார்களின் கருப்பாசயத்தில் நீ! சுக்கில சுரோணித வடிவாய்த்தங்கி உருத்தரித்து முன்னூறுநாள்வரை வளர்ச்சி அடைந்து ஓர் குழவி வடிவாகும்வரை வயிற்றிடை சுமந்து உணவும் வெறுத்து, உடலும் வெளுத்து, நடையுந்தளர்ந்து, நலிவடைந்ததுமன்றி உன்னை ஈன்றெடுக்குங்கால் உண்டாகும் இடுப்புநோய் வேதனை இறப்புத் துன்பத்தினும் எண்மடங்கான துன்பத்தை எத்தனை தாய்மார்கள் எத்தனை பிறவியில் அடைந்துள்ளார்கள் இதுவன்றி,

நீ எடுத்த பிறவிகள்தோறும் நினக்கு தந்தையாகவந்தவரனைவரும்; உன்னை வளர்ப்பதற்காகவும், உனக்குவந்த நோய்களைத் தீர்ப்பதற்காகவும், உனக்கு கல்வி கற்பிப்பதற்காகவும், உன்னை நற்குணம் நற்செய்கையுடையவனாக்கி அவையத்து முந்தியிருப்பச் செய்வதற்காகவும், உனக்காக ஓர் நல்ல பெண்மணியைத் தேடிக் கொணர்ந்து மணஞ்செய்வித்து நீயும் நின் மனைவியும் மருவி இன்புற்று மக்களைப்பெற்று மாண்புடன் வாழ்வதற்காகத் தன் வாழ்நாள் முழுதும் பாடுபட்டுத் தேடிய சொத்துச் சுதந்திர முழுமையும் கொடுத்து இந்த நிலவுலகத்தில் பல்லாண்டு பல்லாண்டாக நீயும், நின்மனைவி மக்களும் இன்ப வாழ்க்கை வாழவேண்டும் என்று தவங்கிடக்கும் தந்தையினையும் தாயினையும் வந்தனை செய்யவேண்டியிருக்க அவர்களின் வயது முதிர்ந்து தண்டூன்றி தளர்ந்து தட்டுக்கெட்டுத்தடுமாறி நடக்குந்தருவாயில் ஆலமரமானது தனது கிளைகளின் பளுவைத் தாங்கமுடியாத காலத்தில், தாங்குவதற்காக தமது கிளைகளினின்றும் பூமி வரையில் இறங்கி வேரூன்றிப் பருத்துத் தாங்குகின்ற **விழுதுகட்கு "மைந்து" என்று பெயர் அந்த மைந்தாகிய** விழுதுபோல் தன்னைப்பெற்ற தாய் தந்தையர்களை முதுமையால் தளர்ச்சியடைய விடாமல் தாங்கிக் கொள்ளும் தன்மையால் மகனுக்கு மைந்தனென்று பெயர் வந்ததென்பதையும் உணராமல் நீயும் நின்மனைவியும் கடுஞ்சொல் என்னும் கொள்ளிக்கட்டையால் புண்படச்செய்து புறக்கணித்ததால் எண்ணற்ற தந்தை தாயார் தாங்கொணுத் துயருற்று மடிந்தார்கள். இதல்லால்

ஒவ்வொரு பிறவியிலும் நினக்கு மனைவியராய் அமைந்த மாதர்கள் நீ செய்த அட்டூழியங்களெல்லாம் பொறுத்தும் நின் தந்தை நினக்களித்த செல்வமெல்லாம் பறத்தையர்க்களித்ததுமன்றி நின் மனைவி அணிந்திருந்த பொன்னணி யாடை முதலியவைகளையெல்லாம் கழற்றிக்கொடுபோய் அப்பறத்தையர்க்கீய்ந்து பாழ்பண்ணியதையும் சகித்திருந்த பத்தினிப்பெண்களாகிய நின் மனைவிகள் நீ பன்னேய்கட்காளாய் பழிசுமந்து இறந்து விடுவதினுல் எல்லாமிழந்து மீதியாயிருந்த மங்கலநாணையும் இழந்து கைமையென்ற பெயராயுந்தாங்கி தான் அழகாக அணிந்திருந்த பொன்னுடை அரதன முதலிய அணிபணிகளெல்லாம் அகற்றி நல்ல நாட்களில் நாலுபேர் நடுவில் வரமுடியாமல், மன்ம்புழுங்கி பிறந்தகத்திலோ புகுந்தகத்

திலோ அண்ணிமாரிடத்திலும் ஒரகத்திகள் நாத்திகளிடத்திலும் புழுக்கை வேலை செய்து ஆயுள் முழுதும் புலம்பித்தவித்துப் போன்றிய பெண்களை கணக்கிடமுடியுமா அஃதல்லாமல்

நீ எடுத்த ஒவ்வொரு பிறவியிலும் "கற்கக் கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்ற மறைமொழிப்படி இளமையிலேயே கற்கவேண்டிய நூல்களைக்கற்று அதிற்கூறிய நற்பண்புகளையும் நல்லொழுக்கங்களையும் கடைபிடித்தொழுகி உலகில் நற்பெயரெடுத்து நல்லறமாகிய இல்லறத்திலிருந்து அல்லலைப்போக்கும். பல்லறஞ் செய்து பரமனைத்தொழுது பரகதியை யடையாமல் பல்லுயிர்கட்கும் அல்லலைப்புரிந்து பாவியென்று பெயர்படைத்து இறந்துபட்டு எமனுலகையடைந்து நீ செய்த தீவினைக்கீடாக ரவுரவாதி நரகங்களை அடைந்து நீ படுகின்ற கொடுந்துன்பங்களை பக்கத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கின்ற இரக்கமில்லா யமபடர்களும் கண்டிரங்கி அந்தோ! நீ ஒரு மனிதனு? நீ எத்தனை பிறவியெடுத்தாய் எத்தனை தரம் எத்தனை நரகத்தையடைந்தாய்? எத்தனை வகையான துன்பத்தை இந்த நரகங்களிடையே அனுபவித்தாய்? இன்னும் உனக்கு புத்திவரவில்லையே யென்று கடிந்துரைத்து வெறுப்படைவார்கள் அன்றியும்

நீ எடுத்த ஒவ்வொரு பிறவியிலும் உனக்கு உறவினராகவும் நண்பர்களாகவும், பிள்ளைகளாகவும், உடன் பிறப்பாளர்களாகவும், பணியாளர்களாகவும் வாய்த்தவர்களெல்லாம், உன்னுடைய கொடுஞ்செயல்களால் எவ்வளவு துன்பமடைந்தார்கள் என்பதை எப்போதாவது சிந்தித்துப் பார்த்தாயா? இல்லையே. அந்தோ இவ்வுலகந் தோன்றிய நாள்முதல் இதுவரையில்நீயும் பிறந்தும், இறந்தும் வந்துகொண்டே இருப்பதனுல் உன்னுல் எத்தனைபேர்கள் எத்தனை காலமாய் துன்புற்று நடுங்குகிறுர்கள் ஓ கெடுமதியுடைய மனிதனே இஃது உனக்கு அழகாகுமா?

**இதற்கு மேற்கோள்:—**

*அநுபவாநந்த திபிகை, முதற்றிருமுறை, பிறவியைப்பழித்தல்*

**முதற்பாடல்.**

கலக யமன்விடு தூதர் பிடித்திரு கைகள் சலித்தனரால்
  கருவள ரச்சும வாபெரு நோயிற் கருத்தனை நொந்தனரால்
அலகரு தந்தையர் பெற்று வளர்த்தழி யாத்துயர் கொண்டனரால்
  அரிவையர் பூண்மங்கல நாணிழவால் அழுது சலித்தனரால்
பலமுறை நரகு புகுந்தடை துயரயல் பார்த்து வெறுத்தனரால்
  பந்து சனங்கள் சினேகர் சிசுக்கள் பதைத்து நடுங்கினரால்
உலக முதித்திடு நாள்முதல் உடலை யொழிந்து பொறுத்திடலால்
  ஒகெடு வாய்பல பேர்கள் நடுங்க வுருக்கொளல் என்னழகே.

(தொடரும்)

[ மதுரை கலைமகள் தமிழ் நிலையம் அருட்டிரு. திருநீ. சண்முகானந்த அடிகளாரவர்கள் தமிழிலும், வடமொழியிலும் மிகவல்லுனர். கவிப் புலவருங்கூட பல மாணவர்கட்கு வேதாந்தம் சித்தாந்தம் இலக்கிய இலக்கணம் முதலிய பல நூற்களைப் பாடஞ் சொல்லும் ஆசிரியர் பண்பமைந்தவர்கள். இப்பெரியார் நம் துறவி இதழுக்கு சிவஞானபோதம் என்ற அரிய கட்டுரையை ஆரம்ப முதல் தொடர்ந்து எழுதியனுப்புகிறார்கள். இதில் சைவ சமயக் கருத்துக்களையும் பிற சமயக் கருத்துக்களையும், பதி, பசு, பாசம் இம்மூன்றன் இலக்கணத்தையும் உள்ளவாறு விளக்குகிறது. பரம் பொருளாகிய இறைவனோடு இரண்டறக்கலக்கும் பான்மையுடையது. எனவே நாம் ஒவ்வொருவரும் படித்து அதன் பொருளை உள்ளவாறு உணர்ந்து பிறவா நெறியைப் பெறுவோமாக. ]

### சைவசித்தாந்தம்

# சிவஞான போதம்.

முன் (ம 1 இ 12 ப 170) தொடர்ச்சி

அற்றேல், வினைசடமாகலிற் சென்றணைய மாட்டாவாயினும், உயிர்கள் சித்தாகலின் அவையே அவற்றது பயனையறிந்து எடுத்து நுகருமன்றோ! இறைவன் எற்றுக்கெனின்!—ஒருவனெடுத்து நேராகப் பிடித்தவழி இரும்பினை யிழுத்துக்கொள்ளுங் காந்தம்போல, அவ் வினைப் பயன்களைப் பிறழாமல் நுகர்விக்கும் இறைவனால், அவ்வினைகளைச் செய்யும் உயிர்கள் அவற்றைச் செய்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பின்கட்பொருந்தி அவற்றதுபயனை நுகருவர். அவ்வுயிர்கள் தமக்கென வறிவுஞ் சுதந்தரமுமின்றி மலத்தின் மறைப்புண்டு கிடக்கும் பெத்தகாலத்தில் தாமேவினையின் பயனையறிந்து எடுத்துநுகரும் ஆற்றலுடையனவாகாவாகலின் இறைவனே யறிந்தெடுத்தணைப்பன் என்பது பாரிசேடவளவையாற் போந்தவாறுணர்ந்துகொள்க.

அற்றேல், அவ்வினை உற்பத்தியுடையதோ! உற்பத்தியின்றியதோ? உற்பத்தியுடையதெனின், முன்புஇல்லாதது இடையே தோன்றுமென்பதுபட்டு, உள்ளது காரியப்படும்என்று சொல்லுதலாகிய சற்காரியவாதத்திற்கேலாது. உற்பத்தியின்றியதெனின், ஒருவர் கூட்டவேண்டுவதில்லையன்றோ எனின்:—நெல்லின் கண்ணுமியும், செம்பின் கட்களிம்பும், அந்நெல்லுஞ் செம்பும் உளவாயின அன்றே உள்ளனவன்றி யிடையேவந்தனவல்ல. அவ்வாறே, மாயை கன்மம் மலம் என்னும் மூன்றும் அநாதியே யுள்ளனவாம். ஞாயிற்றின் சந்நிதியிலுளதாய தாமரைமலர் அலர்தலும் கூம்புதலும் அஞ்ஞாயிற்றினாற் செய்யப்படுமாறுபோல, அம்மும்மலங்களும் தத்தங் காரியங்களைச் செய்தல் இறைவனாலேயாம். மாயையின் காரியந் தனுகரண முதலாயின வினையின் காரியம் இன்பத்துன்பமுதலாயின. மலம், காரியவேறுபாட்டால், மோகம், மதம், இராகம், கவலை, தாபம் வாட்டம், விசித்திரம், என எழுவகையாம். இவற்றின் விரிவனைத்தும் மாபாடியத்துட் கண்டுகொள்க.

அற்றேல் அஃதங்கனமாக, வினையுண்டென்பதற்குப் பிரமாணம் என்னையெனிற்:—காரியங்களெல்லாம் ஒருங்கே தோன்றாது முறையே தோன்றுதற்குக் காரணம் வினையேயன்றிப் பிறிதின்மையானும், வினையில்லையாயின் விதித்தனசெய்து விலக்கியன வொழிதலால் பயனின்றாய் முடியுமாகலானும், வினையினதுண்மை துணியப்படும்.

இனி உலகிற்கு முதற்காரணமாய், நித்தமாய்ச் சடமாய், இறைவனின் வியாப்பியமாய் மெய்ப்பொருளாய் அருவாயுள்ளது மாயை யெனவும், அது சுத்தம் அசுத்தமென விருவகைப்படுமென வும்; சுத்தமாயை, மாமாயை, குடிலை, குண்டலி, விந்து என்பன வொருபொருட் கிளவிகளெனவும், அசுத்தமாயை, அதோமாயை, மாயை, மோகினி என்பனவொருபொருட்கிளவிகளெனவும், இவற்றுள் சுத்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சுத்தமாயையெனவும், அசுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் அசுத்தமாயை யெனவும், சுத்தப் பிரபஞ்சம் சிவதத்துவ முதலாயினவும், அசுத்தப்பிரபஞ்சம் கலை முதலாயினவெனவும் தொகுத்துணர்ந்து கொள்க. இவற்றின் விரிவை யெல்லாங் காணவேண்டின் மாதவச்சிவஞான மாபாடியத்துட் கண்டு தெளிக. ஈண்டு விரிக்கிற்பெருகும். இன்னுந்தத்துவங்களின் இலக்கணங் களையும்பிறசமயத்து ஆசங்கைகளையும் அவற்றின் மறுப்புகளையும் ஆண்டே நோக்குக.

இனி இருவினை யுண்மைக்குக் கூறிய பிரமாணமே அவற்றிற் குப் பற்றுக்கோடாகிய மாயை யுண்மைக்கும் பிரமாணமாமென்ப தனானும், மேலைச்சூத்திரத்திற்கூறிய சற்காரியவாதத்தானும், மாயை யுண்மை பெறப்பட்டது. மலமுண்மைக்குப் பிரமாணமும் மேலைச் சூத்திரத்துப்பெறப்பட்டது.

இதுகாறுங் கூறிய கருத்துக்களனைத்தையும்

"உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று" —எனவும்,

"அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானி னுகராரே
லார்தா மறிந்தணைப்பா ரங்கு எனவும்"

"நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்."

எனவும் வரும் மெய்கண்டார் திருவாக்கானுணர்க.

## 2-ம் சூத்திரம். 3-ம் அதிகரணம்.

"போக்கு வரவு புரிய" என்பது என் சொல்லிய வாறோ வெனின் இரண்டாமதிகரணத்து இறைவனுக்கு ஐந்தொழில் செய்தலே இலக்கணமென வலியுறுத்தியவழி, ஏகான்மவாதம் நான்கனுள்ளே "பிரமமே நான், நான் ஒரு படித்தன்றிப் பல்வேறு வகைப்பட்ட விகாரப்பொருள்களோடுகூடிப்பலவாற்றான் விளையாடுகின்றேன்" என்று இவ்வாறறிவதே முத்தியென்பதாகக்கூறும் கிரீடாப்பிரமவாதிகள் மதம்பற்றிவரும் ஆசங்கையை நீக்கி அவ்விலக்கணத்தை வலியுறுத்தற்கெழுந்தது இம்மூன்றாமதிகரணமெனக் கொள்க. மாயாவாதிகள் மதத்தை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணமென்பாருமுளர். அஃதமையாது, என்னை? அத்துவிதம் என்ற சொல்லானே? அவரை மறுத்து ஆன்மாக்களைப் பெறுவித்தமையின். இனி இவ்வாறன்றிக் குடாகாய வுவமையேபற்றி இருவினையான்வரும் புனருற்பவம் ஆன்மாக்களின் பொருட்டுச் சிவத்துக்கேயாமெனச் சிவாத்துவிதிகள் கூறுங்கடாவையாசங்கித்தும் மூலப்பகுதியிற் றோன்றும் புத்திதத்துவத்திற்கே அவ்வுற்பவ மெனச்சாங்கியர் கூறுங் கடாவையாசங்கித்தும் எழுந்தது இவ்வதிகரணமெனக் கொண்டு தோற்றமும்ஈறும் அவ்வுரிமையுள்ளதற்கேயன்றி ஏனையவற்றிற்கு உளதாக வின்மையான் ஆன்மாக்களே மாறிப்பிறந்து வருமென மேற்கொண்டதென்றுரைப்பினும் அமையும்.

அவ்வாசங்கைகள் வருமாறு:—சங்காரக் கடவுளாகிய இறைவனுக்கு ஐந்தொழில் செய்தல் இலக்கணமெனச் சிறப்புவகையாற் கொள்ளுதலமையாது; இறைவன் சங்காரத்தொழில் மாத்திரமன்றி யேனைத் தொழிலுஞ் செய்வனாயிற் சங்கார காரணன் என விஷேடித்தல் வழுவாய் முடியுமன்றோ? எனின் :- அவ்விஷேடணம் *தன்னோடியை பின்மை மாத்திரை நீக்கித் தலைமை பற்றி வந்தடுத்ததாகலின் வழுவாகாது! என்னை சங்காரத் தொழிற்குத் தலைமை "ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியின்மையால்" என்றதனாற் பெறப்படும் அற்றன்று. இறந்த வுயிர்கள் மீளப் பிறக்குமாயினன்றே உற்பத்தி சங்காரகாரணமாதலும் அதுகொண்டு சங்காரத்திற்குத் தலைமையுண்மையும் அமையும், இறந்தவுயிர் மீளப் பிறக்குமென்பதற்குப் பிரமாணமென்னை? எனின் :- பஞ்சாக்கினி வித்தையை யுணர்த்தும் உபநிடதமுதலிய ஆகமங்களே பிரமாணமாம். அவ்வித்தை வருமாறு! வேள்வி முதலிய நல்வினை செய்த வுயிர்கள் அவ்வினையின் பயனை நுகர்தற்பொருட்டு இத்தூலவுடல் நீங்கிச் சூக்கும வுடலோடுந் துறக்கஞ் சென்றுப் பூதசாரவுடலாகிய தேவவுடலெடுத்து ஆண்டு வாழ்ந்து மீள நிலத்தின் வினைச் சேடத்தால் அவ்வுடம்பினின்றும் நீங்கிச் சூக்கும வுடலோடும் மேகமண்டலத்தின் எய்தி, ஆண்டு நின்று

---

*இவ்விஷேடண விலக்கணத்தையும், பிறிதினியைபு நீக்கிய விஷேடண விலக்கணத்தையும், நன்னூற் சிவஞானவிருத்திற் காண்க.

மழைத் தாரையினேடு நிலத்தினெய்தி நெல் முதலிய பைங்கூழின் விரவி நின்று அவையுணவாய்ப் பரிணமித்த வழி, அவற்றினேடு கூடித் தந்தையின் உதரத்துட் சென்று ஆண்டுச் சுக்கிலமாய்ப் பரிண மித்து, அதனேடுகூடித் தாய்வயிற்றிற் சென்று ஆண்டுக் கருவாய்ப் பரிணமித்துத் தூலதேகத்தோடு நிலத்திற் பிறக்கும். ஆன்மாத் தூல வுடம்பினின்றும் நீங்கிய வழித் துறக்கமும், மேகமண்டலமும், நிலனும் தந்தையும், தாயும், என்னுமைந்திடத்தும் வைகித் தோன்றுதலின் இவ்வைந்திடமும் அங்கியாகவும், இவற்றின் எய்திய ஆன்மா ஆகுதி யாகவும், இருத்தலின் இஃதோர் தியான சாதகமாகலின் பஞ்சாக்கினி வித்தையெனப் பட்டதென வுணர்க. இவற்றின் பரப்பெல்லாம் நீல கண்டபாடியத்துட் கண்டுதெளிக.

பிரமாணமெனக் கொண்ட பஞ்சாக்கினி வித்தை இங்ஙன மாயினும் "குடத்தின் கண்ணுள்ள ஆகாயம் குடம் உடைந்தவிடத்து ஆகாயத்தோடு கூடுமாறுபோல உடம்பின் கண்ணுள்ள ஆன்மா உடல் நீங்கியவழிப் பரமான்மாவோடு கூடும்" என மீட்சியின்மையை யுணர்த் தும் பைங்களோப நிடதத்தோடு முரணுதலின் இவ்வித்தை முதலிய வற்றை யுணர்த்துமாகமங்கள் புனைந்துரையே யன்றிப் பிரமாண மெனக்கோடல் பொருந்தாது. அன்றியும் இவ்வுடம்பு நீங்கிய வழி வேறுடம்புகள் உளவாமென்னின் :- அவையனைத்தினு மொன்றாய் நிற்குஞ் சிறப்புக் காரணம் ஒன்றெனக் கோடல் வேண்டும். அது காணு மையானும் வியாபகமாகிய ஆன்மாப் போக்குவரவு புரிதல் பற்றுக் கோடின்றிப் பொருந்தாமையின் இவ்வுடம்பு நீங்கிய விடத்துப் மற்றோ ருடம்பிற் செல்லுதற்குப் பற்றுக்கோடு பிறிதின்மை யானும், பிறிதுண் டாயின் அதுவே யமையுமெனவாகி இவ்வுடம்பும் மிகையாமாகலானும் மற்றும் இறந்தவுயிரேபிறக்குமாயின் முற்பிறவியின் நடந்தவனைத்தும் இப்பிறவியிற்றெரிந்துரைத்தல் வேண்டுமாகலானும், இறந்த வுயிரே பிறக்குமென்றற்குப் பிரமாணமின்றாம்.

ஆகவே சற்காரியவாதங் கூடாமையாற் சாங்காரத்தொழிற்குத் தலைமையின்மையின் சங்காரகர்த்தாவென்றது தன்னே டியைபின்மை மாத்திரைநீக்கித் தலைமைபற்றி வந்தவிஷேடணமெனல் பொருந்தா மையின் அது பிறிதினியைபு நீக்கிய விஷேடணமேயாம், எனவே சங்காரகர்த்தா, ஏனைப்படைப்பு முதலிய தொழிற்குக் கர்த்தாவாதல் பொருந்தாது என்பது தானே வந்தமைதலின், ஐந்தொழில் செய்தல் இறைவனுக் கிலக்கணமெனப் பொதுவாற் கூறுதல் பொருந்துமா யினும் "சங்கார காரணனே ஐந்தொழில் செய்வன்" எனச்சிறப்பு வகையாற் கூறுதல் இலக்கணவழுவாம் என்பது,

அற்றன்று:— தோற்றமும் நாசமுந் தொடர்ச்சியாயுள்ள பொருட்கே, தோற்றங்கூடுமன்றி ஏனைப்பொருட்குத் தோற்றங் கூடா தென்னுஞ் சற்காரிய வாதத்தால் ஆன்மாக்களே யிறந்து பிறந்து

வருவனவாம். என்னை?:—உடம்பு நீங்கிப்போங்கால் முதற்கண் கெடுவன கண்ணுஞ்செவியு மாகிய இந்திரியங்களாகலின் அவைகெட இவ்வுடம்பு அழிந்தவிடத்துத் தனக்குக் கேடின்றிப் படைப்புக்காலந் தொட்டு மாசங்காரகாலம்வரையிலும் நிலைபெற்றுள்ளதாகிய சூக்குமவுடலம் பூதசாரவுடம்பாயும், யாதனுவுடம்பாயுங் காரியப்பட, உயிரானது அவ்வுடம்புகளிற் பொருந்தி முறையே துறக்க நிரயங்களிற் சென்று இன்பத்துன்பங்களை நுகர்ந்து அதன் பின்னர், நனவின்கண் கண்ட பொருளைக் கனுக்காணுங்காலத்து மறந்து அறிவுமாறுபட்டாற்போலத் துறக்கநிரயங்களிற் சென்றவாறும், ஆண்டனுபவித்தவாறுமாகிய இன்னோரன்னவற்றை மறந்து அறிவு மாறுபட்டு முன்னுடம்பு இறக்குங் காலத்துப் பொருந்திய வினையானது காட்டுகின்ற தேவகதி, மக்கட்கதி, விலங்கின்கதி, நரகர்கதி என்னும் நால்வகைக் கதி நிமித்தம்பற்றி உயிர் விரும்பியவாறு மனஞ்செலுத்துதலான் அக்கதிக்கண்ணே செல்லுதற்கேதுவாய் எஞ்சிநின்ற அறம் பாவ சேடத்தால் சூக்குமவுடல் மாத்திரையாய்ச் சென்று அம்மனந்தள்ளிய கதிக்க மைந்த அக்கருவின்கண் பொருந்துமென வுணர்க.

இங்ஙனங்கூறியதுகொண்டு உடற்றிரிவும், இடத்திரிவும், அறிவுத்திரிவும் பெறப்பட்டவாறும், புதிது புதிதாய்த்தோன்றுதல்பற்றிச் சற்காரியவாதத்திற் கிழுக்கின்மையும், போக்குவரவுபற்றி வியாபகத்திற்கு இழுக்கின்மையும், துறக்கநிரயங்களில் அநுபவித்தொழிந்தமைபற்றிப் புனருற்பவகாரணத்திற் கிழுக்கின்மையும், தூலபூதங்கள் சூக்குமபூதங்களாகிய தன்மாத்திரைகளின் காரியமாகலின் அவற்றானுய தூலஉடம்பு அச்சூக்கும உடம்பின்காரியமாம் என்பதும், முதலுற்பவத்தில் சூக்குமஉடலம்முதற் படைக்கப்பட்டுப் பின்னர் அதுகாரணமாகவரும இருவினையாற் பலவேறுவகைப்பட்ட தூலஉடலம் படைக்கப்பட்டனவென்பதும் போந்தவாறுணர்ந்து கொள்க.

அற்றேலது அங்ஙனமாகுக, "குடாகாயம் குடமுடைந்தவழி ஆகாயத்தொடு கூடுமாறுபோல, உடம்பு நீங்கியவழிச் சிவன் சிவத்தோடுகூடும்" என்னுஞ் சுருதிக்குப்பொருளென்னை யெனின்:— அரவு பழையதோலையுரித்துப் புதியதொரு தோலைப் போர்த்துக் கொள்ளுதலும், புருடன் நனவுடம்பின்நீங்கிக் கனவுடம்பிற் செல்லுதலும், யோகிகள் தம்முடம்பின்நீங்கிப் பரவுடம்பிற்சென்று மீடலும், ஆகியவுவமைகளும் ஆகமங்களிற் கூறப்படுதலின், அரவு தன் தோலுரித்தல் முதலாயின தூலவுடம்புவிட்டுப் போமாற்றிற்கும், குடாகாயவுவமை சூக்கும வுடம்புவிட்டுப் போமாற்றிற்கும் உவமைகளாமெனத் தாற்பரியம் உணர்ந்து கொள்ளப்படுமாகலின் இறந்தவுயிர் மீளப் பிறக்குமென்பது பெற்றாம். பெறவே சடசேதனப் பிரபஞ்சமிரண்டும ஒடுங்கின சங்காரத்தினின்றும் தோற்றமெய்துமென்றற்கு ஐயமின்மையின், சங்காரகாரணனென்றது, தன்னேடியைபின்மை மாத்திரை நீக்கித் தலைமைபற்றிவந்தடுத்த விஷேடணத்தான் விஷேடிக்கப்பட்டதேயா மாகலின், ஐந்தொழில் செய்தல் சங்காரகாரணனுகிய விறைவனுக்கேயுரிய இலக்கணமாதற் கிழுக்கில்லையெனவறிக

சூக்கும வுடலத்தினியல்பு மேலையதிகரணத்துக் கூறிப்போந்தமையின், ஈண்டு எண்பத்துநான்கு நூறுயிர யோனிபேதத் தூலவுடம்புகளோடு ஆன்மாக்கள் கூடி நிற்கும். அவற்றோடுகூடிநின்று அவைகள் போக்குவரவு செய்தற்கிடனாகிய அண்டங்களின் அளவையும், இயல்பையும், சிவஞானமாபாடியத்துட் கண்டுதெளிக. விரிக்கிற்பெருகும்.

ஈண்டுக்கூறிய கருத்துக்களனைத்தையும், "பூதனாசரீரம்போனாற் புரியட்டரூபந்தானே யாதனா சரீரமாகி." எனவும். "சூக்குமவுருவதென்னிற் றூலகாரணமதாகும்" எனவும். "மாறியிவ்வுருவமெல்லாம் வருவதெங்கே நின்றென்னிற்-கூறியசூக்குமத்தாம" எனவும். "விதிப்படி சூக்குமத்தேயுருவரும்" எனவும்வருஞ் சிவஞானசித்தியாரானும்.

"தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்
றுதைந்துவரு முற்பீசஞ் சராயுசங்க ணன்கி, னூற்றமிகு
தாபரங்கள் பத்தொனப தென்று மூர்வபதி னைந்தமரர்
பதினொன்றே டுலவா, மாற்றருநீ ருறைவன பறவைகணாற்காலி
மன்னியிடும் பப்பத்து மானிடரொன் பதுமா, வேற்றியொரு
தொகையதனி லியம்புவர்கள் யோனி யெண்பத்து நான்குநூ
[றுயிரமென் றெடுத்தே"

எனவரும் சிவப்பிரகாசத்தானும்,

"கண்ட நனவைக் கனவுணர்விற் றுன்மறந்து
விண்படர்ந் தத்தூடு வினையினாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றுன, எனவும்,

"அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது"

எனவும் வரும் மெய்கண்ட தேவநாயனார் திருவாக்கானு முணர்க.

(தொடரும்)

## குறிப்பு.

"*துறவி*" என்னும் திங்களிதழில் வெளியிட கட்டுரை எழுதியனுப்பும் துறவிகள் நல்ல கடிதத்தில் தொடர்பு எழுத்தில்லாமல் எழுத்துக்களை நன்கு தெரிந்து கொள்ளும்படி தனித்தனியாக ஒவ்வொரு கடிதத்திலும் ஒரேபக்கத்தில் எழுதி ஒவ்வொரு தமிழ் மாதம் 15உக்குள் அனுப்பிவைக்கும்படி வேண்டுகின்றோம்.

[ பழநி பாலைய தேசிக ஆதீனப் புலவர் தவத்திரு ஐயாறு அடிகளார் சிறந்த பேச்சாளரும், எழுத்தாளருமாவர். அவர்கள் திருவருணைத் திருக்கூட்டத்தின் தலைவராக இருந்து பல கிராமங்கள் தோறும் தம் குழுவினரோடு சென்று சமயப் பிரசாரம் செய்து வருகிறார்கள். அவ்வரிய தொண்டோடு நம் துறவி இதழுக்கும் ஆரம்பமுதல் அறம், பொருள் என்ற தலைப்பில் சிறந்த கட்டுரையை வரைந் தனுப்பினார்கள். இவ்விதழில் 'துறவு'' என்ற தலைப்பில் ஓர் அரிய கட்டுரையைத் தீட்டி அனுப்பியுள்ளனர். இக்கட்டுரை துறவு நிலையின் பெருமையினையும் துறவியின் வரம்பையும் மிக அழகாக எடுத்துக் கூறுகின்றது. இதை ஒவ்வொரு துறவியரும் பிறரும் படிப்பது மிக அவசியமாகும். ]

## " துறவு "

"துறவு" என்ற சொல்லுக்கு விடுதல் என்று பொருள். ஒவ்வொருவரும் நல்லாசிரியன்பாற்சென்று கற்கத் தக்க அறிவு நூல் களை நன்கனம் கற்று நல்லோர் பலரிடத்தும் பலமுறை சென்று அறவுரைகளை ஐயந்திரிபறக்கேட்டு ஆராய்ந்து தெளிந்து உண்மை உணரும் உணர்வினையுடையராய் உண்மை நெறி நிற்றல் வேண்டும். நில்லாத உலகியல்புகண்டு நிலையா வாழ்க்கையல்லேன். என்று அறத்துறத்தல் வேண்டும். இளமையும் நில்லா யாக்கையும் நில்லா வளவியவான்பெருஞ் செல்வமும் நில்லா. புத்தேளுலகம் புகல்வரும் தாரார். மேலான அறமாகிய துறவறமே சிறந்த துணையாவது. அடைதற்கரிய மக்கட்பிறப்பினை அடைந்த ஒவ்வொருவரும் இப் பிறப்பாலாகிய பயனை எய்துதல் வேண்டும். கரும்பினை ஆலையில்-இட்டு ஆட்டிக் கருப்பஞ்சாறுவேறு கோதுவேறாகப் பிரித்துச் சாற்றினை மட்டும் கொண்டு கோதினைச் சாறுகாச்சும் எரிதுரும்பாகக் கொள்வர். எரிதுரும்பாகி இக்கோது அழிகின்றதே என வருந்தார். அதுபோல உடம்பாலாய பயனாகிய பேரின்பம் பெறுபவர் உடம்பை-க்கு மனம் வருந்தார்.

ஒருபானையில் தண்ணீர்விட்டு அதில் ஆமைகளைப் போட்டு அப்பானையை அடுப்பிலேற்றிக் கொதிக்கவைத்தால் கொதிப்புத் தாங்காமல் ஆமைகள் இறந்துவிடும். பிறகு ஆமையூனைப் பக்குவப் படுத்தி உண்பர். ஆனால் ஆமை நம்முயிர் நீங்கிவிடுமேயென்று எண்ணாமல் நமக்கு நீர்நிலை கிடைத்ததே என்றெண்ணி அப்பானை நீரில் மகிழ்வுடன் விளையாடும், அவ்வாமையின் நிலைபோன்றதே உலகியல் நெறியும்.

"கொலைஞர் உலையேற்றித் தீமடுப்ப ஆமை
நிலையறியா தந்நீர் படிந்தாடி யற்றே. நாலடியார்.

உலகியல் நெறியினை உள்ளவாறுணர்ந்தோர் நரை திரை மூப்புக்கள் உடன் வருவனவென்றுணர்ந்து இளமையிலேயே துறவினை மேற்கொள்வர். உடம்பையும் உயிரையும் பிரிக்கும் கூற்றுவன் எப்போதாயினும் வருவன். அப்போது அந்தக் கூறறுவனைப்

போற்றினும் விட்டுப்போகான். பொருள் கொடுத்தாலும் போக-மாட்டான். தவத்தர் என்னுன், இளைஞர் என்றெண்ணுன், மிகப்-பெருஞ் செல்வரென்றெண்ணுன், கொடுந்தொழிலாளனும் கூற்றுவன் உயிர்களைக்கொன்று குவித்துக்கொண்டே இருக்கின்ருன் அழல்வாய்ச் சுடலை உயிரற்றஉடம்புகளைத் தின்றுகொண்டே இருக்கின்றது. இதனை நாமும் கண்கூடாகப் பார்த்துக்கொண்டே இருக்கின்ரும். இதனைப் பார்த்துக்கொண்டிருக்கும் நாம் மிக்க நல்லறத்தினையன்ரே விரும்ப வேண்டும்.

இளமையிலே சிறந்த அறிவு நூல்களைக்கற்று மனையறத்தினை மாண்புற நடத்தி உவர்ப்புவந்தவிடத்து உலகப்பற்றினைத் துறக்கு மொருவன் எவற்றையும் விடலாம். எல்லா உயிர்களிடத்தும் இயல்-பாகவே செல்வதாய 'அருளை' மட்டும் விடலாகாது. இல்லறத்தார்க்கு அன்புடைமை இன்றியமையாததுபோல துறவறத்தார்க்கு 'அருளுடைமை' இன்றியமையாதது. இல்லறத்தார்க்குச் செல்வம் 'அன்புடைமை' துறவறத்தார்க்குச் செல்வம் அருளுடைமை. மனை-யறத்தினை மாண்புற நடாத்தியவர்களும் பிறவுயிர்களிடத்து அருளுடையராய் தம்முடம்பையும் வெறுத்தனர். "புரு" ஒன்றினை-பொருட்டு தலையேறினன் "சிபி" என்னும் பேரரசன். இவ்வரலாறு வருமாறு,

வேடர்கள் பறந்து திரியும் பறவைகளையும், விலங்குகளையும் வேட்டையாடி அவற்றின் ஊனினையுண்ணும் இயல்பினர். வேடர்-குலத்தான் ஒருவன் ஒரு புருவினைத் துரத்தி வந்தான். அப்புரு வேடனுக்கு அஞ்சி அருளுடை வேந்தனும் சிபிச்சக்கரவர்த்திபாற் சரண் புகுக்கது. வேடன் அரசன்பாலணைந்து எனக்கு மிகப்பசியாய் இருக்கின்றது யான் ஊனைத்தவிர வேறெதனையும் உண்ணுதவன் இப் புருவைத்தவிர வேறு விலங்குகளோ பறவைகளோ எனக்குக் கிடைக்க வில்லை எனவே இப்புருவை எனக்குணவாக அளிக்க வேண்டுமென விண்ணப்பம் செய்தான். புருவையும் காப்பாற்ற வேண்டும், வேடன் பசியையும் போக்கவேண்டும் என்றெண்ணினன் சிபிச்சக்கரவர்த்தி புருவின் எடையுள்ள ஊன் உனக்குத் தருகின்றேன் உனதெண்ணம் என்னென்ருன் அரசன். வேடனும் ஒப்புக்கொண்டான். உடனே துலாக்கோலை நாட்டி புருவினை ஓர் தட்டில் வைத்தான் தான் ஒரு தட்டில் எறினன் "புருவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந் தகை" என்ருர் நமது கம்ப நாடர். இல்லறத்தார்களே அருளினை மேற்கொண்டு இங்ஙனம் நின்ருர்களென்பதனை நோக்கின் துறவறத்-தாராம் நாம் அருள்நெறியினையன்ரே மேற்கொள்ளல் வேண்டும்,

பொருட்செல்வத்தால் கல்விச்செல்வம் கேட்விச்செல்வம் இரண்டனையும் உடையராய் இவற்ருல் அறிவென்னும் திருவினை அடைதல்வேண்டும். அறிவுவளர்கின்றது. இதுமட்டும் போதாது. அருளும் வளர்தல் வேண்டும். அருளின்றிய அறிஞர்கள் அறிவெனும்

திருவினை யடைந்தவராகார். அறிவினுல் ஆயபயனையும் அடையார். "அறிவினுன் ஆகுவதுண்டோ பிறிதின் நோய், தன்னேய்போற் போற்ருக்கடை'' என்பது திருவள்ளுவர் திருவாக்கு. துறவறத்தினை மேற்கொண்டதூயோர் உலகிற்கு நேத்திரமென்ன நிலவுகின்றனர். உலகினைச் செந்நெறிமேல் நிற்கச்செய்வர். முதிர்ந்த அறிவாலும், அருளாலும் முதிர்ந்தோர் அருளிய நூற்பொருள்களை உணர்த்துவர். அம்மையப்பனும் கடவுளையும் காட்டுவர்.

நல்லொழுக்க நெறியிலே நின்று துறவறத்தினை மேற் கொண்டவர்களது பெருமையே சிறப்புடையதென்பது முதநூற்றுணிபு. இறப்புப் பிறப்புக்களின் வகைமையினை ஆராய்ந்து அறிந்து மேலான துறவறத்தினை மேற்கொண்டவரது பெருமையே உலகில் விளங்கி நிற்பதாகும். குணம் என்னும் மலையுச்சியில் ஏறி நிலைபெற்று நிற்ப பவர்கள் தம் உள்ளத்தே சிறிது வெகுளியையும் கொள்ளார்.

''குணமெனும் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது''

என்ருர் திருவள்ளுவப் பெருந்தகையார்.

இக்குறட்பாவின் உட்கிடையினை உள்ளவாறுணர்ந்த கம்ப நாடர் தண்டகவன முனிவரரது தன்மையினைப் பேசுமிடத்து

"வேண்டின வேண்டினர்க் களிக்கும் மெய்த்தவம்
பூண்டுளர் ஆயினும் பொறையின் ஆற்றலால்
மூண்டெழு வெகுளியை முதலில் நீக்கினுர்
ஆண்டுறை அரக்கரால் அலைப்புண் டாரரோ. —என்ருர்.

இராவணன் முதலான அரக்கரால் துன்பம் உற்ற தண்ட கவன முனிவரர் வேண்டினவர்க்கு வேண்டிய வாரளிக்கவல்ல மெய்த் தவராவர். ஆயினும் கொடுஞ்செயலாளராம் அரக்கனை முனிந்து சபித்திலர் அம்முனிவரர். பொறையின் ஆற்றலால் மூண்டெழு வெகுளியை அடியோடு நீக்கியவர் அப்பெரியார். வெகுளா திருத் தலையன்றி தம்மையிகழ்ந்து துன்பம் செய்தோர் தம் கொடுஞ்செய லால் எரிவாய் நிரயத்து வீழ்ந்து வருந்துவரே எனவும் வருந்துவர். இதுவே பெரியோரது கடமையுமாகும்.

''தம்மை யிகழ்வாரைத் தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வல்கொல் என்று
பரிவதூம் சான்ருேர் கடன்.'' —நாலடியார்.

எல்லா உயிர்களிடத்தும் அருளுடையராய் ஒழுகுபவர் அந்தணர் என்று சிறப்பித்துப் பேசப்பெறுவர். நமது திருவள்ளுவப் பெருந்தகையார் கடவுளை "அந்தணன்" எனவும், துறவியரை அந்தணர் என்றும் அகம் உவந்து உரைத்தார்.

"அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது" திருக்குறள் 8-கடவுள் வாழ்த்து.

"அந்தண ரென்போர் அறவோர் மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"'
திருக்குறள் 10-நீத்தார்பெருமை.

இத்தகைய சீருடையப் பெரியோர்களிடத்திலேதான் அருட் செல்வம் பொருந்துவதாகும். பொருட்செல்வம் ஏனையோரிடத்திலும் பொருந்துவதாகும். எனவே அருட்செல்வமே எல்லாச் செல்வங் களினும் சிறப்புடையதாகும்.

"அருட் செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள" ஷை அருளுடைமை

பலவகையாலும் ஆராயுமிடத்து அருளே உயிர்க்குற்ற துணை யாகும். நல்லமுறையில் ஆராய்ந்து அருளினை கொள்ளல்வேண்டும். அருள்பொருந்திய பெரியோர்கள் சிறிதும் துன்பமுறமாட்டார்கள். இவர்கட்கென்நாளும் இன்பமே.

"அருள்சேர்ந்த நெஞ்சினர்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்." ஷை 3.

உலகில் தோன்றியுள்ள உயிர்கள் எல்லாவற்றையும் உளத் தால் ஊறுசெய்யக்கருதாமலும், ஊறு தர வாக்கால் உரையாமலும் செயலால் யாதொருவிதமான இடையூறும் செய்யாமலும் இருத்தல் வேண்டும். எல்லாவுயிரும் இருக்க நினைத்தல்வேண்டும். நமது தாயு மானார், "எல்லாவுயிரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே என்றார். வாக்கால் எல்லாவுயிர்களும் இன்புற இயம்புதல்வேண்டும். இங்ஙனம் ஈடுபட்டுள்ள ஆன்றோர்களை எல்லாவுயிர்களும் விரும்புவன

ஸ்ரீ ராமபிரானும் இளையபெருமாளும், சீதாபிராட்டியும் காடு- சென்ற காலத்தே அக்காட்டு வழியில் உள்ள ஈரமும் உளவென்று இளவேனிற்காலமும், காருறு குறி ஒப்பக்காட்டியது. பகலவனை சூரியன் உடுபதியாய சந்திரனெனத் தண்ணிய ஒளியினையுகுத்தான்.

மேகங்கள் தவழ்ந்தன. வலிய கூரிய பருக்கைக் கற்கள் வறுத்த விதையை ஒத்தன. தலைமகளைப் பிரிந்த தலைமகன துளமெனக் கொதிப்பதாய அவ்வனம், பிரிந்த தலைமகன் வருகையைக் கண்ட தலைமகளது உளம் எனக் குளிர்ந்தது. சீதையைப் பிரிந்த பின்பு ஸ்ரீ ராமபிரானும் இளையபெருமாளும் சுக்கிரீவ மகாராஜன் இருக்கும் மலையில் ஏறிச்சென்றபோது இவர்களைக் கண்ட வேங்கை முதலிய கொடிய விலங்கினங்கள் தத்தம் கன்றுகளைக் கண்டாற்போன்ற தன்மையை அடைந்தன. அவர்கள் பின்சென்றன. அவர்கள் இதமெனும் பொருள் அல்லாமல் வேறெதனையும் அறியாத இயல்பினர் ஆதலால் விலங்குகள் அவர்களது தன்மையை அடைந்தன மயில் முதலிய பறவைகளெல்லாம் இவர்களது திருமேனிமேல் பகலவன் வெயில் உறுமே என்று மனமிரங்கி பெரிய சிறகுகளை விரித்து பந்தர் செய்து அணிவகுத்தெய்தின. மேகக்கூட்டங்கள் இவர்கள் மேலே தட்பம் உண்டாம்படி சிறு துளிகளைச் சிந்தின. பகலவனைக் கண்ட-வுடனே தீயினைக் கக்கும் இயல்பினவாய சூரியகாந்தக் கற்கள் தேன் நிறைந்த அப்பொழுதலர்ந்த மென்மையான மலர்கள்போல இவர்கள் திருவடி தம்மேல் தோயுந்தோறும் குழைந்தன. புல், செடி, மரம் முதலானவைகளெல்லாம் இவர்களைத் தொழுவனபோலச் சாய்ந்தன.

"தன் கன்று கண்டவன்ன தன்மையை தறுகட் பேழ்வாய்
மின்கன்றுக் கோண்மா வேங்கையென் றினைய வேயும்
பின்சென்று காதல் கூறப் பேழ்கணித் திரங்கு கின்ற
என்கன்று கின்ற எண்ணிற் பற்பல இவரை யம்மா கம்ப நாடர்

*தறுகண்—அஞ்சாமை. பேழ்கணித்து—கண்களை மூடிக்கொண்டு.*

*இவ்விலங்குகள் இவர்களது தன்மையை நாம் நண்ணவில்லையே என்று கண்களை மூடிக்கொண்டு வருந்தின.*

"மயில்முதற் பறவை யெல்லாம் மணிநிறத் திவர்கள்மேனி
வெயிலுறற் கிரங்கிமீதா இருஞ்சிறைப் பந்தர் வீசி
எயில்வகுத் தெய்துகின்ற இனமுகிற் கணங்களெல்லாம்
பயில்வுறத் திவலைசிந்திப் பயப்பயத் தழுவும் பாங்கர் கம்ப நாடர்

"காயெரி கனலும் கற்கள் கள்ளுடை மலர்களே போல்
தூயசெங் கமலபாதம் தொய்தொறும் குழைந்து தோன்றும்
போயின திசைகள் தோறும் மாநெடு புல்லுமெல்லாம்
சாய்வுறுந் தொழுவ போலிங் கிவர்களோ தருமமாவர். ஷ

*காய் எரி கனலும் கற்கள் என்றது சூரியகாந்தக் கற்களை.*

*எல்லா உயிர்களையும் காப்பாற்றி ஆள்பவர்க்கு அஞ்சும்வினைகள் உளவாகா.*

"மன்னுயிர் ஓம்பி யருளாள் வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை." அருளுடைமை 4.

தன்னுயிரஞ்சும் வினை அருளாள்வார்க்கு இல்லையென்றவதனால் அவர்கட்கு ஒருகாலத்தும் அல்லல் உண்டாகாது என்பது தானே விளங்கும். நமது திருவள்ளுவதேவனார் அடுத்த குறட்பாவில் எடுத்துக்காட்டுடன் இனிது விளக்குகின்றார்.

"அல்லல் அருளாள்வார்க்கில்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி. என்று.

அருளாள்பவர்க்கு அல்லல் இல்லை என்பதற்கு காற்றும் அது வழங்குகின்ற வளம் நிறைந்த நிலவுலகமே சான்றாகும் என்பதே பொருள். காற்றானது அலைந்துகொண்டே இருக்கின்றது. ஒவ்வொரு காலத்தே மிக வேகமாகவீசி மரங்களை முறிந்துவிழச் செய்கின்றது. செடி, கொடி, புல், பூண்டு முதலியவைகளைச் சாடுகின்றது மக்கள் வாழும் வீடுகளையும் கீழே விழச்செய்கின்றது. இதுபோலவே அருளென்பது சிறிதும் இல்லாதவன்மனம் உடையோர், பலருக்கும் அல்லலை உண்டாக்கித் தாமும் ஓரிடத்தில் நிலையாமல் உலகெங்கும் அலைந்து திரிந்துழல்பவர் ஆவர். நிலமோ என்றால் தன்னிடத்து உறையும் மக்கள் நல்லவராயினும் அல்லவராயினும் அவர்களைத் தாங்குகின்றது. தீயவாகளையும் விடுவதில்லை. உழுது கொத்தித் துன்புறுத்துபவர்க்கும் விளைபொருளாகிய பயனைத்தந்துதவுகின்றது. மணி, பொன் முதலிய சிறந்த பொருள்களையும் தருகின்றது. இத்தகைய நிலைத்தினை ஒத்தவர் அருளினையாளும் ஆன்றோர்கள்.

அருளின் நீங்கி உயிர்கட்கு அல்லனவாம் தீயவே செய்பவர் பொருளின் நீங்கியவராவர். தம் உயிர்க்கு உறுதி செய்தலையும் மறந்தவராவர்.

இவ்வுலக வாழ்விற்கு இல்லாமல் முடியாத பொருளினைத் தேடுபவரும் அருளொடும் அன்பொடும் ஈட்டுதல் வேண்டும் என விழுமியோர் விளம்புகின்றனர் என்றால் உண்மைப் பொருளைப்பற்றி நிற்கும் உயர்ந்தோர் அருளினின்றும் நீங்கினால் உண்மைப்பொருளைப் பற்றுதல் ஒண்ணாது, சகடக்கால்போல மாறி மாறிவரும பொருளில்லாதவா இவ்வுலக வாழ்வில்லாதவரே. அது அருளில்லா அவ்வுலக வாழ்வில்லாரேயாவர். இவ்வுல வாழ்விற்கின்றியமையாத பொருளினையிழந்தவர் பிற்காலத்தே பொருளினையடைதலும் கூடும். அருள் அற்றவர் அற்றவரே. ஆகவே அருளற்றவருக்கு ஒருகாலும் அருள் உண்டாவதில்லை. ஒருவன் பலநூல்களையும் கற்றுவனாயினும் தெளிந்த உணர்வுடையன் அல்லனாயின் உண்மையுணரான். தெளிந்தவன்தான் உண்மை உணர்வான். அதுபோலவே அருளில்லாதான் செய்யும் அறம் அறமாகாது. மறமேயாம். அருளுடையான் செய்வதேயறமாகும்.

(தொடரும்.)

[ பழநி சாது சுவாமிகள் ஆஸ்ரமம் தவத்திரு. திரிமூர்த்தி சுவாமிகளைப் பலரும் அறிவார்கள். தமிழிலும் ஆரியத்திலும் நல்ல புலமை வாய்ந்தவர்கள், படித்தபடி நடக்கும் பண்புடையவர்கள் இவர்கள் அம்பிகையின் உபாசனையில் ஆழ்ந்த சித்தமுடையவர்கள். துறவொழுக்கத்திற் சிறிதும் வழுவாதவர்கள் இப் பெரியார் நம் "துறவி" இதழுக்கு மனமுவந்து வடமொழியிலுள்ள யோகசிகோப நிஷத்துக்குத் தமிழில் பொழிப்புரை எழுதி அனுப்பிவருகிறார்கள் இக்கட்டுரை வாழ்க்கையின் குறிக்கோளை நன்கு எடுத்துக்காட்டுகிறது. படித்துப் பயன் பெறுவது நமது கடமையாகும். ]

# யோக சிகோப நிஷத்—தமிழ் பொழிப்புரை.

முன் (ம 1 இ 12 ப 172) தொடர்ச்சி.

எங்ஙனமெனின் கயிறு ஒன்றே அறிந்தவனுக்கு அச்சமற்ற தாயும், அறியாதவனுக்கு சற்பவுருக்கொண்டு அச்சுறுத்துவதாயும் ஆகின்றதோ, அதுபோல என்று அறிக. எப்படிக் குடம் மண்வடிவேயாமோ, அப்படியே உடலும் சித்வடிவமே என்று ஞானி அறிகின்றான். மற்றும் எல்லாம் தன்வடிவே எனக் கண்ட ஞானி ஆன்மா இது, அனான்மா இது என்ற இந்த விசாரணையானது வித்துவான்களால் வீணே செய்யப்படுகின்றது எனக் கருதுகின்றான். மண்ணைக் குடமாகவும், பேய்த்தேரை நீராகவும், மரங்களை வீடாகவும், இரும்பைக் கத்தியாகவும், எப்படி அறிகின்றானோ, அப்படியே அஞ்ஞானத்தின் சேர்க்கையால் மூடன் ஆன்மாவையே தேகமாய்க் காண்கின்றான். (24)

நான்காவது அத்தியாயம் முடிந்தது

## ஐந்தாவது அத்தியாயம்.

### (அ...கை) தேகமே சிவாலயமெனக் கூறல்.

பிரம்மாவே! மிக ரகசியமானதும், பிரம்ம சொரூபத்தை அடைவிப்பதுமான யோகத்தை மீண்டுஞ் சொல்லுகிறேன். மனதை உண்முகமாக்கி நின்று அதை முறையாகக் கேட்பாயாக. இந்த உடலானது பத்து வாயிலையுடைய நகரமாகவும், பத்து நரம்புகளாலாகிய பெருவழிகளையுடையதும் பத்து வகையான காற்றுகளால் நிறைந்ததும், பத்து இந்திரியங்களாகிய வேலையாட்களை யுடையதும், ஆதார முதலிய ஆறு சக்கரங்கட்கு இடமாயுள்ளதும், ஆறு ருதுக்கள் தங்குகின்ற வனமாகவுள்ளதும், நான்கு பீடங்களை வரிசையாக வுடையதும், நான்கு வேதங்கள் விளங்குகின்ற இடமானதும், பிந்து, நாதம் மகாலிங்கம், சிவம், சக்தி இவைகள் இருக்குமிடமானதுமான இந்தவுடல் சிவாலயமென்று சொல்லப்படுகிறது. மற்றும்எல்லாவுயிர்களும் விரும்பிய சத்தியை அடைதற்கு இடமாயுள்ளது. இவ்வுடல் என்று அறியவும். (4)

**(அ....கை) ஆறு ஆதார சக்கரங்கள், நான்கு பீடங்கள் என்பவற்றின் விளக்கங் கூறல்.**

தாமரையிற் ரோன்றியவனே! மூலாதாரமானது ஆண்குறிக்கும் மலவாயிலுக்கும் நடுவில் முக்கோண வடிவாய் உளதென்பது அறியவும் அதுவே ஜீவவடிவ சிவனிருக்கும் இடமெனச் சொல்லப்படுகிறது. அவ்விடத்திலேயே குண்டலி எனப்பெயருள்ள மகாசக்தி நிலைபெற்று விளங்குகின்ருள். எங்கிருந்து பிராணனுகிய காற்று வெளிப்படு கின்றதோ, எங்கிருந்து மூலக்கனல் உண்டாகின்றதோ, எங்கிருந்து பிந்து வெளிப்படுகின்றதோ, ஹம்ஸ என்ற மந்திரமானது உதிக்கின்ற இடம் யாதோ. மனம் தோன்றும் இடம் யாதோ, அதுவே எல்லா விருப்பத்தையுந் தருவதான காமகிரி பீடமென்று அறிக. ஆண் குறி யினடியில் ஆறிதழுள்ள சுவாதிட்டான சக்கரம் உளது. நாபியில் பத்திதழுள்ள மணிபூரக சக்கரம் உளது.

இதயத்தில் பன்னிரண்டிதழுள்ள பதுமம் உளது. அது அனுஹத மென்ற பெயருள்ள பெரிய சக்கரமாகும். அதனேடு பூர்ணகிரி என்ற பீடம் உளதென்று அறியவும். கழுத்திற் பதினறு இதழுள்ள பதுமம் உளது. அது விசுத்தி எனப் பெயர் பெறுகின்றது. அங்கேயே ஜாலந் தரமெனப் பெயருள்ள பீடமும் உளது, புருவங்களின் நடுவில் இரண் டிதழ்க்கமலம் உளது அது ஆஞ்ஞா சக்கரமெனப் பெயர் பெற்று மிகச் சிறந்ததாய் விளங்குகின்றது. அதற்குமேல் உட்டியாண பீடம் உளது. பீடங்கள் எல்லாம் இவ்வுடலில் சக்தி வடிவாயமைந்து விளங் குகின்றன என்று அறிக. மூலாதாரத்தில் பிருதிவி தத்துவம் உளது. அது நாற்கோண வடிவமானது அதற்கு அதிதேவதை பிரம்மா, என்று அறிக. ஜலதத்துவம் நாபியிலுள்ளது. எட்டாம் பிறைச் சந்திரனைப் போன்று அறைவட்டமுள்ளது. அதற்கதிதேவதை விஷ்ணு என்று அறியவும். அக்கினி தத்துவம் மார்பில் உளது. அது முக்கோண வடிவமானது. அதற்கு அதிதேவதை உருத்திரன் எனப்படுகிறது. வாயு தத்துவம் கண்டத்தில் உளது. அது அறுகோண வடிவமானது. அதற்கு அதிதேவதை மகேசன் என்று அறிக ஆகாய தத்துவம் புருவ மத்தியில் உளது. அதன் குறி வட்டமானது அதற்கு அதி தேவதை சதாசிவனென்று அறிக. மற்றும் புருவங்களின் நடுவில் மனதிற்கு இடமாக நாததத்துவம் உளது. அதுவே சிவம் இருக்கு மிடமென்று அறிக இவ்வாறு பஞ்ச பூதங்களும் அவற்றின் கோணங் களும். அவற்றின் அதிதேவதைகளும் இடங்களும் விரித்துக் கூறப் பட்டன.

(15)

**(அ..கை) உடலிலுள்ள நரம்புகளின் நிலையும் அவற்றின் செயலையுங் கூறல்.**

பிரம்மாவே! அதன் பிறகு உடம்பிலுள்ள நரம்புகளின் இடத் தையும், அவற்றின் செயலையுங் கூறுகின்றேன். ஒருமை மனதுடன்

கேட்பாயாக. மூலாதாரத்தினுள் முக்கோணத்தில் சுழுமுனை நாடி உளது. அது பன்னிரண்டு அங்குலமுள்ளதாய் அடியிற் பிளவுபட்ட மூங்கில் போன்று, பிளந்த வாயினை உடையது. அதுவே பிரம்ம நாடி எனக் கருதப்படுகிறது. அச்சுழுமுனு நாடியினது இருபகத்திலும் இடை பிங்கலை என்ற நாடிகள் தொடர்ந்து செல்லுகின்றன. அவை நாபியிலுள்ள விலம்பினி நாடியில் கோக்கப்பட்டவைகளாய் மூக்கினது நுனிவரையிலும் செல்லுகின்றன, அவைகளில் இடை நாடியிலுள்ள காற்றானது குளிர்ச்சியானது அதுஇடதுமூக்கால் வெளிப்படுகின்றது. பிங்கலை நாடியிலுள்ள காற்று சூரியனைப்போன்று வெப்பமானது அது வலதுமூக்கால்வெளிப்படுகின்றது நாபியில்விலம்பினிஎன்றநாடி யானது வெளிப்படையாய் நிலைபெற்றுளது. அது கோழிமுட்டை போன்று உளது என்று அறிக. அதிலிருந்து நாடிகள் தோன்றி மேலும், கீழும், குறுக்குமாகச் செல்லுகின்றன. அதுவே நாபிச் சக்கரமென்று சொல்லப்படுகிறது. அந்த முட்டை வடிவ நாபிச் சக்கரத்திலிருந்து காந்தாரீ, ஹஸ்தி ஜிஹ்வை, என இரு நாடிகள் தோன்றி இருகண்களை நோக்கிச் செல்லுகின்றன. நாபியிலிருந்து மீண்டும் பூஷை அலம்புஷை என இரு நாடிகள் தோன்றி இரு கர்துகளை நோக்கிச் செல்லுகின்றன. மீண்டும் அதிலிருந்து சூரா என்று பெயருள்ள பெரிய நாடி தோன்றி புருவங்களின் நடுவை அடைகின்றது.

நாபியிலிருந்து விஸ்வோதரி என்ற நாடி தோன்றி வயிற்றி லேயே இருந்து கொண்டு நால்வகை உண்டியையும் உண்கின்றது, மீண்டும் சரஸ்வதியென்ற நாடி தோன்றி நாவின் நுனிவரை செல்லு-கின்றது. நாபியிலிருந்து ராகா என்ற நாடி தோன்றி மூக்கு நுனி வரை செல்லுகின்றது அது நீரை விரைவில் குடிப்பதும், தும்மலை உண்டுபண்ணுவதும், மூக்கில் சளியைச்சேர்த்துவைப்பதும் ஆகின்றது சங்கினி என்ற நாடி கழுத்திலிருந்து தோன்றுகின்றது. அது வயிறு வரையிலும் சென்றதாய் உணவின் சாரத்தை எடுத்துச் சென்று தலை உச்சியில் எப்பொழுதும் சேர்த்துவைக்கின்றது கொப்புழிலிருந்து மூன்று நாடிகள் கீழ்நோக்கிச் செல்லுகின்றன. அவற்றில் குஹூ என்ற நாடி மலத்தை வெளிப்படுத்துகின்றது. வாருணீ என்ற நாடி சிறுநீரை வெளிவிடுகின்றது. சித்திரா என்று பெயருள்ள சீவினி நாடி வீரியத்தை வெளியாக்குகின்றது. இவ்வாறு நாடிகளின் கூட்டம் சொல்லப்பட்டது. இனி பிந்துவின் இலக்கணங் கூறுகின்றேன் கேட்பாயாக. (27)

**(அ...கை) பிந்து, அக்கினி, சந்திரன் மூன்றுஞ் சுழுமுனு நாடியின் உடல் எனக் கூறல்.**

பிரம்ம நாடியின் உடல் தூலம், சூக்குமம், பரம் என மூன்றாக உள்ளன. அதன் விளக்கம் :- பிரம்மத்தினது தூலவடிவம் வீரிய

மெனப் படுகின்றது. சூக்குமமானது:- பிந்துவென்றும், பஞ்சாக்கினி என்றுங் கருதுகின்றனர். பரமானது:- சந்திரனுக உளது எப்பொழு-தும் இவற்றின் சாக்ஷி சதாசிவம் என்று அறிக. (28)

**(அ....கூ) பிரம்ம நாடியினது பிந்துவடிவ சூக்கும உடலான ஐந்துஅக்கினிகளின் தியானம், அதன்பயன் இவற்றைக்கூறல்**

அதல முதலிய உலகங்களின் அடியிலுள்ளது காலாக்கினி எனப்படுகிறது. அந்த அக்கினியே உடலில் மூலக்கன லென்ற பெயருடன் மூலாதாரத்தில் உளது. அதிலிருந்துதான் நாதம் வெளிப்படுகின்றதென அறியவும். வடவாக்கினி கடல் நடுவில் இருப்பதெனக் கூறுகின்றனர் அந்த வடவா என்ற கனலே உடலிலுள்ள எலும்பிலிருந்து கட்டை கல்களிலிருந்து வெளிப்படுங்கனல்போல வெளிப்படுகின்றது. கட்டை கல்களிலிருந்து வெளிப்படுங்கனலானது பார்த்திவாக்கினி எனப்படுகிறது. அந்தப் பார்த்திவாக்கினியானது மனைவியினிடத்து உளதென்று அறியவும். மின்னல் வடிவ அக்கினி ஆகாயத்தில் உண்டாகிறது. அதுவே தனதுள்ளத்தின் கண்ணேயுள்ள ஆன்யாக்கினி என்று அறியவும். மீண்டும் ஆகாயத்தில் சூரியாக்கினி உளது. அச்சூரியவடிவ அக்கினியே உடலில் நாபிச்சக்கரத்தை அடைந்துளது என்று அறியவும். அச்சூரியாக்கினி மேல்நோக்கி நின்றபொழுது அமுதம் பெருகுகின்றது. கீழ்நோக்கமுள்ளபொழுது விஷத்தை, அல்லது விஷத்திற்கொப்பான வெப்பத்தைக்கக்குகின்றது, என்று தெரிந்து கொள்வாயாக. நாவினது இருபக்கத்தையுந்தாலு எனப்படுகிறது. அதனடியில்சந்திரன் உளன். அவன் அங்கு கீழ்முகமாயிருந்து எப்பொழுதும் அமுதைப்பொழிகின்றான். தூய படிகத்திற்கொப்பான பிந்துவானது புருவங்களின் நடுவிலுளது. அதுவே சதாசிவனுடைய சூக்கும வடிவென்று உணர்க. மூலாக்கினி, வட-வாக்கினி, பார்த்திவாக்கினி, வித்யு தாக்கினி, சூரியாக்கினி எனக் கூறியுள்ள இந்தப் பஞ்சாக்கினியை யாதொரு அறிஞன் நன்றாய்த் தெரிந்துகொண்டு தியானஞ் செய்கின்றானே, அவனால் நால்வகையுண்டியும், அமுதபானமுஞ்செய்யப்படுகிறது அவனே ஹோமம் செய்து முடித்தவனுகின்றான்இதில் ஐயமில்லை. (35) (தொடரும்)

"துறவி" திங்கள் வெளியீட்டிற்கு நன்கொடை அளித்தவர்கள்.

8—12—54. முதல் 30—12—55. வரை.

| ஊர் | பெயர் | ரூ அ பை |
|---|---|---|
| சித்தூர் | திரு. சாந்தானந்த அடிகள் | 10—0—0 |
| வியாசர்பாடி | ,, சுவாமி முக்தானந்தா அவர்கள் | 85—0—0 |
| சென்னை | ,, சுவாமி அருணகிரிநாதர் அவர்கள் | 225—0—0 |
| சீர்காழி | ,, T. N. பரிமணம்பிள்ளை அவர்கள் | 50—0—0 |
| எறும்பூர் | ,, முத்தையசுவாமிகள் | 80—0—0 |
| திருவொற்றியூர் | ,, பெருமாள்சுவாமிகள் | 10—0—0 |
| சென்னை | ,, சேதுராம சுவாமிகள் | 10—0—0 |
| பழனி | ,, பாலைய சுவாமிகள் | 10—0—0 |
| ,, | ,, குமரகுருபர அடிகள் | 40—0—0 |
| | ,, R. S. நாமதேவ ரெட்டியார் | 1—0—0 |

நம் துறவி இதழின் நன்மைகருதிப் பொருளீந்து பேரன்பும் பேராதரவும் காட்டி இதழ்வளம் பெறச்செய்த பேரருளாளர்கட்கு நமது உளங்கனிந்த வணக்கமும் நன்றியும் உரியது.

REGED. No. M. 6630.

# புத்தக விளம்பரம்.

* * *

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ஆத்துமானந்த விளக்கம் மூலமும், உரையும் (காலிகோ பயிண்டு) | .... | 2-0-0 |
| ஷை புஸ்தகம் (ராப்பர் பயிண்டு) | .... | 1-4-0 |
| நித்தியாநித்தியவஸ்து விவேகம் வசன வடிவம் | .... | 0-12-0 |
| திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர தேசிகரந்தாதி மூலமும், உரையும் | .... | 0-6-0 |

மேற்கண்ட புத்தகங்கள் கிடைக்குமிடம் :—

**ஸ்ரீ ஆத்துமானந்த ஆச்சிரமம்,**

நிலகபுரம் ரோட்டுத்தெரு,

அம்பாசமுத்திரம். (S. Ry)

அச்சுரிமை: ந. வேணுகோபாலன் ஸ்ரீஜயலக்ஷ்மி பிரஸ், திருவண்ணாமலை
ஆசிரியரும், வெளியிடுபவரும்: சுவாமி சொருபானந்தா, கீழ்ப்பாலூர்.